


சிறு வெளியீடு

அக்டோபர் 2019

# ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா

ஷியாம்ஜி கிருஷ்ணவர்மா அக்டோபர் 4, 1857ல் பிறந்தவர். இந்தியன் சோசியாலஜிஸ்ட் எனும் புகழ்வாய்ந்த இதழை நடத்தியவர். ஹோம்ரூல் இயக்கத்தை கொண்டுசென்றவர். பெரும் சமஸ்கிருத அறிஞர். ஆக்ஸ்போர்ட் பட்டம் பெற்ற முதல் இந்தியர் - ஆக்ஸ்போர்டில் பணியாற்றியவர் என்கிற பெருமை பெற்றவர். லண்டனில் 1900களின் தொடக்க ஆண்டுகளில் இந்தியாவிலிருந்து லண்டனுக்கு வரும் இளைஞர்களுக்கு தங்குமிடம் தந்திட்டவர். விடுதலையின் கோயில் என வர்ணிக்கப்படும் அவ்வீட்டிற்கு இந்தியா ஹவுஸ் எனப் பெயரிட்டனர். பெரும் புரட்சிகர பெயர்களாக இன்று அறியப்படும் மேடம் காமா, மதன்லால் திங்கரா, ஹர்தயாள், செண்பகராமன் பிள்ளை, விரேந்திர சட்டோபாத்யாய் என அனைவரும் இவரால் ஈர்க்கப்பட்டிருந்தனர். தாதாபாய் நெளரோஜி, திலகர், லாலாஜி, பிபின் சந்திரபால் சுரேந்திரநாத், காந்திஜி என பலரின் தொடர்புகளுடன் இருந்தது அவ்வில்லம். பல்வேறு நாடுகளின் விடுதலை புரட்சிகர தலைவர்களுடனும் அவர்கள் தொடர்பில் இருந்தனர்.

காங்கிரசின் மிதப்போக்குகளில் அதிருப்தி அடைந்த இளம் நண்பர்கள் பலர் வன்முறை மூலமாவது பிரிட்டிஷாரை விரட்டி சுயராஜ்யம் என நினைத்தனர். தங்களது அமைதியான குடும்ப வாழ்க்கை சுகங்கள் ஆகியவற்றை தியாகம் செய்ய சித்தமாயினர். உயிர்த்தியாகத்திற்கும் தீவாந்திரவதை கொடுமைக்கும் தயாராக இருந்தனர்.

ஷியாம்ஜி மே மாதம் 1857ல் மாண்டவி எனும் ஊரில் பிறந்தார். மாண்டவி கட்ச் பகுதி குஜராத்தில் உள்ள துறைமுக ஊர். தார் பாலைவன தட்பவெப்ப தாக்கம் கொண்ட ஊர். கட்ச் பகுதி கலாச்சார மரபுகளை கொண்டது. சோம்நாத் உலகப்புகழ் வாய்ந்த கோயில். ஊர் கொண்டாடும் தெய்வம் ஆநிரை மேய்க்கும் கிருஷ்ணன். ஷியாம்ஜி எனில் கருநிறம் கொண்டவர் எனப்பொருள். அங்கு பனசாலிகள் என்பார் விவசாயம், வியாபாரம் செய்து வந்த பிரிவினர். ஷியாம்ஜி குடும்பம் மாண்டவியில் இருந்தாலும் தந்தையார் வியாபாரம் தொடர்பாக பம்பாயில் இருந்துவந்தார். குழந்தை ஷியாம்ஜி தான் பிறந்த ஆண்டின்போதே தாயை இழந்தார். தாய்வழி பாட்டியால் வளர்க்கப்பட்டார். ஆரம்பக் கல்வி முடித்த பின்னர் உயர்நிலைப்பள்ளிக்கு புஜ் நகர் போனார். அங்கு முதல் மாணவனாக வந்தார்.

ஆர்ய சமாஜின் ஈர்ப்பால் பிராமணியத்தின் தீங்கு தீமைகளிலிருந்து இந்து மதத்தை விடுவிக்க சிலப்பெரியவர்கள் போராடி வந்தனர். விஷ்ணு பரசுராம் சாஸ்திரி, மாதவதாஸ் ரகுநாத், கர்சந்தாஸ் முல்ஜி போன்றோர் குழந்தை மணம் எதிர்ப்பு, சதி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு, கட்டாய விதவைக்கோலம் எதிர்ப்பு என

போராடி வந்தனர்.. புனா வந்திருந்த சங்கராச்சாரியருடன் விதவை மணம் ஏன் கூடாது என இவர்கள் கேள்வி எழுப்பி விவாதித்தனர்.. பிராமணர் அல்லாத மாணவர்களுக்கு நிதி உதவி செய்து அவர்களை உயர்த்துவது எனவும் அவர்கள் செயல்பட்டனர்.

ஷியாம்ஜி நல்ல அறிவாளி மாணவன் என அறிந்த பரோபகாரி மதுரதாஸ் லவாஜி என்பார் அவரை பம்பாய்க்கு வரவழைத்தார். வில்சன் உயர்நிலைப்பள்ளியிலும் சேர்த்தார். பாடசாலையில் சமஸ்கிருதம் கற்கவும் ஏற்பாடு செய்தார். வில்சன் பள்ளியிலும் ஷியாம்ஜி முதல் மாணவராக இருந்தார். அவருக்கு சேட் கோகுல்தாஸ் கல்வி ஊக்கத்தொகை கிடைத்தது. அக்காலத்தில் செல்வந்தர்கள் வீட்டுப் பிள்ளைகள் படித்த எல்பின்ஸ்டன் பள்ளிக்கும் ஷியாம்ஜி சென்றார். பணக்கார குடும்பத்தின் மாணவர்கள் சிலர் நண்பர்களாயினர். அப்படிப்பட்ட மாணவர் ஒருவரின் தமக்கை பானுமதி என்பாரை 1875ல் அவருக்கு மணமுடித்தனர்.

இந்து மதத்தில் நிலவும் தீமைகளை சமூக குற்றங்களாக ஷியாம்ஜி உணர்ந்தார். 1874ல் பம்பாய் வந்த சுவாமி தயானந்தரை அவர் சந்தித்தார். அவர்கள் இடையில் உறவு பலப்படத் துவங்கியது. ஏபரல் 10, 1875ல் தயானந்தர் பம்பாயில் ஆர்ய சமாஜ் கிளையைத் துவங்கினார். தயானந்தர் போலவே மகாதேவ ரானடே, கர்னல் ஆல்காட், மேடம் பிளாவட்ஸ்கி ஆகியோரிடமும் அன்பைப் பெற்றார் ஷியாம்ஜி. சாஸ்திரிகளை அவர்களது சமஸ்கிருதத்தால் வீழ்த்து (Improve your Sanskrit- beat the Shastri with his own element with his own weapons..) என ரானடே அவரை உற்சாகப்படுத்திவந்தார் .

ஷியாம்ஜி கிருஷ்ணவர்மா வட இந்தியா, மேற்கு இந்தியா பகுதிகளில் சுற்றுப்பயணம் மேற்கொண்டார். சமூக சமய சீர்திருத்தங்கள் குறித்து உரையாற்றினார். நாசிக் செஷன்ஸ் நீதிபதி கோபால்ராவ் ஹரி என்பார் அவரின் சமஸ்கிருத உரையக்கேட்டு வியந்தார். மொழி ஆற்றல் மிகச்சரியானதாக இருக்கிறது. அவர் பெரிய அளவில் வளர்வார் என்றார்.

ஆக்ஸ்போர்ட் பல்கலைகழக பேராசிரியர் மோனியர் வில்லியம்ஸ் 1877ல் இந்தியா வந்தார். 18 வயதிலேயே சமஸ்கிருத புலமையுடன் இருந்த ஷியாம்ஜி குறித்து அவர் வியப்படைந்தார். ஆக்ஸ்போர்ட் வரச்சொல்லி அழைப்பும் கொடுத்தார். தயானந்தர் அவர்களின் ஒப்புதலையும் பெற்று ஷியாம்ஜி 1879ல் அங்கு சேர்ந்தார்.. மேடம் பிளாவட்ஸ்கிக்கு ஏன் ஷியாம்ஜி போகிறார் - மோனியர் என்ன இவரைவிட ஆற்றல் பெற்றவரா என்கிற விமர்சனம் இருந்தது. ஷியாம்ஜி இங்கிலாந்து போக விரும்பியதை தெரிவித்திருந்தால் தியோசோபிகல் சொசைட்டி மூலம் அவருக்கு ஏற்பாடு செய்திருக்கலாம். கிளையை அங்கு துவங்கியிருக்கலாம் என்றார். ஆல்காட்டும் ஷியாம்ஜிக்கு மோனியர் குறித்த

ஜாக்கிரதை உணர்வை வெளிப்படுத்தி பண்டிட் என்கிற பொறுப்புடன் இந்தியத்தன்மை கெடாமல் வருக என எழுதியிருந்தார்.

1879ல் ஆக்ஸ்போர்ட் வந்த கிருஷ்ணா பல்லியோல் கல்லூரியில் பட்டப்படிப்பை முடித்தார். 1884ல் பார் கவுன்சிலில் பதிவு பெற்றார். சட்டப்படிப்பிற்காக அவர் கிரேக்க லத்தீன் மொழிகளைக் கற்றார்.. பாணினி இலக்கணத்தில் அவரை மிஞ்சக்கூடியவர் எவருமில்லை எனப் பெயர் பெற்றார். ஆக்ஸ்போர்ட் பட்டம் பெற்ற முதல் இந்தியர் என்கிற பெருமை அவரைச் சேர்ந்தது. மொழியியல் அறிஞராகவும் அவர் கருதப்படலானார்.

ராயல் ஏசியாடிக் சொசைட்டியில் Origin **of writing in India** குறித்து 1881ல் அவர் ஆய்வு அறிக்கை தந்தார். பிரிட்டிஷ் இந்தியாவின் செயலர் அவரை பெர்லின் கீழைத்தேய மாநாட்டிற்கு அனுப்பினார். அங்கு sanskrit **as a living language** ' என்கிற ஆய்வை நல்கினார். பண்டித ரமாபாய் அவர்கள் அனுப்பியிருந்த சமஸ்கிருத உரையையும் அங்கு அவர் படித்தார். 1882ல் எம்பயர் கிளப் உறுப்பினராக ஷியாம்ஜி இணைத்துக் கொள்ளப்பட்டார். முன்னாள் கவர்னர்கள், வைஸ்ராய்கள், இராணுவ அதிகாரிகள் அதில் உறுப்பினர்களாக இருந்தனர். 1883ல் ஜெர்மனியில் நடந்த கீழைத்தேய மாநாட்டிலும் அவர் பங்கேற்றார். இந்தியவியல் எனப்பேசிவந்த எவராலும் புறக்கணிக்க முடியாதவராக கிருஷ்ணவர்மா உயர்ந்தார்.

கார்ல் மார்க்ஸ், எங்கெல்ஸ் ஆகியவ்ர்களுடன் உடன்பட்டும் முரண்பட்டும் அவர்கள் காலத்திற்குப் பின்னர் வளர்ந்து வந்த ஹைண்ட்மேன் உடன் ஷியாம்ஜி கிருஷ்ணவர்மா பழக்கமானார். மார்க்சின் புதல்வி எலியனார் ஹைண்ட்மேனுடன் செயல்பட்டு வந்தார். மேலும் பீஸ்லி, ஸ்வின்னி போன்றவர்களும் ஷியாம்ஜிக்கு பழக்கமாயினர். பேராசிரியர் பீஸ்லி மார்க்சின் நண்பராக இருந்தவர். தொழிலாளர் இயக்கங்களில் தொடர்புகொண்டவர். அகிலத்தில் கூட்டங்களுக்கு தலைமை தாங்கியவர். ஸ்வின்னி சோசியாலஜிகல் சொசைட்டி சார்ந்தவர். இருவரும் ஆக்ஸ்போர்ட் பின்புலம் கொண்டவ்ர்கள். ஹெர்பர்ட் ஸ்பென்சர் மீது ஷியாம்ஜிக்கு ஈர்ப்பு ஏற்பட்டது. ஷியாம்ஜி இங்கிலாந்தின் பிரதமர் கிளாட்ஸ்டோனை சந்தித்த பேசக்கூடியவராகவும் இருந்தார். இந்தியாவின் வயிற்றில் அடிப்பவர்கள் நீங்கள் என நேரடியாக அவரிடம் கூறும் அளவிற்கு வெளிப்படையாக பேசக்கூடியவராக ஷியாம்ஜி இருந்தார்.

தயானந்தர் அவர்களும் கிருஷ்ணா பணம் சம்பாதிக்க மட்டுமா வாழ்க்கை. அங்கு ராணியை பார்த்தாயா? பாராளுமன்றத்திற்கு சென்றாயா என வினவினார் . இந்தியர்கள்தான் நல்லாட்சி தரமுடியும். அதுவும் சம்ஸ்தானங்கள் எழுந்து போராடி அதை கொணரமுடியும் என தயானந்தர் பேசிவந்தார். ஷியாம்ஜியும்

அவ்வாறு நடக்கவேண்டும் என விழைந்தார். இத்தாலி, ஜெர்மனி ஒன்றுப்படுத்திக்கொள்ள எவ்வாறு போராடி வருகின்றன என அவர்களிடமிருந்து அனுபவத்தை எடுத்துக்கொள்ள விழைந்தார்.

1885ல் இந்தியா திரும்பிய ஷியாம்ஜி மத்திய இந்தியாவின் ரத்லம் சமஸ்தான திவானாக ரூ 700 சம்பளத்திற்கு அமர்த்தப்பட்டார். 1900 வரை தொடர்ந்து இருப்பதாக உறுதி தந்தால் சம்பளம் மேலும் அதிகரிக்கலாம் என ராஜா சொல்லி வந்தார். ஆனால் மே 1888லேயே ஷியாம்ஜி உடல் சுகமில்லாமல் ராஜினாமா செய்தார். அவருக்கு ராஜா ரூ 32000 கொடுத்தார். இன்று 25 லட்சத்திற்கு மேல் என கருதமுடியும்.

சுவாமி தயானந்தர் சீடராகி, அவரிடம் மனு ஸ்மிருதி கற்றவர் ராணா சஜ்ஜன் சிங். மேவார் அரசராக இருந்த அவர் 1886ல் மறைந்ததால் அவரின் மாமா பதேசிங் அரசர் ஆனார். அவருக்கு ஷியாம்ஜி உதவி தேவைப்பட்டது. அங்கு திவான் ஆனார் ஷியாம்ஜி.

1895ல் ஜூனாகட் ( குஜராத்) திவான் பொறுப்பை வர்மா ஏற்றார். நவாப் ரசூல்கான் நிர்வாகத்தில் கவனம் செலுத்துவதில்லை என்கிற குறையை ஷியாமா அங்கு கண்டார். சமஸ்தானத்தில் நிர்வாகிகளுடன் முரண்பாடு ஏற்பட்டதால் ஷியாம்ஜி டிஸ்மிஸ் செய்யப்பட்டார். இதில் பிரிட்டிஷ் நிர்வாகிகளுக்கும் சம்பந்தம் இருந்ததாக ஷியாம்ஜி கருதினார். உதயப்பூரின் திவானாக ஆகிட ஷியாம்ஜி முயற்சித்தார். ஆனால் ஆங்கில அதிகாரி கர்னல் கர்சான் வைலி அவர் வரமுடியாமல் தடுத்துவிட்டார். பிரிட்டிஷ் ஆதரவு பத்திரிகைகளில் அவருக்கு அவப்பெயர் ஏற்படுத்தும் செய்திகளையும் அவர் வரவழைத்தார். திலகர் தனது பத்திரிகை மூலம் ஷியாமாவை நியாயப்படுத்தி செய்திகள் வெளியிட்டார்.

பிரிட்டிஷ் எதிர்ப்பிற்கு இனி சமஸ்தானங்களை மட்டும் நம்பி பயனில்லை என்கிற உண்மை ஷியாம்ஜிக்கு புரியத்துவங்கியது. முன்னர் தர்பாரில் அரசர்க்கே பெரும் மரியாதை இருந்தது. பிரிட்டிஷ் அதிகாரிகள் பணிவுடன் மட்டுமே தர்பாரில் இருக்க முடிந்தது. அந்தோ இன்று தர்பார்கள் தண்டனிடத் தொடங்கிவிட்டனவே என கிருஷ்ணவர்மா வேதனை கொண்டார்.

1907ல் அவர் சமஸ்தானங்களுக்கு கீழ்கண்ட கோரிக்கைகளை வைத்தார். பிரிட்டிஷ் அதிகாரிகளை நியமிக்காதீர்- வருமான வரி என ஏதும் விதிக்காதீர்- சர்தார்- ஜாகிர்தார் பஞ்சாயத்துகளுக்கு பிரிட்டிஷ் அதிகாரி துணையை நாடாதீர்- மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் அரசு கவுன்சில்கள் மூலம் சட்டம் இயற்றுவீர். எளிதான வரிவிதிப்பு, மக்கள் பிரதிநிதிகள் மூலம் சட்டம், பிரிட்டிஷாரை அழைக்காமல் நிலப்பிரச்சனைகளைத் தீர்த்தல் என்கிற மூன்று அடிப்படைகளை பின்பற்ற வேண்டினார்.

பிரிட்டிஷ் அதிகாரிகள் லண்டனிலும் இந்தியாவிலும் ஷியாம்ஜியின் சீர்திருத்தம் நடைமுறைக்கு ஒத்துவராது என விமர்சித்தனர். பிரிட்டிஷ் நிமித்தமாகவே பல சமஸ்தானங்கள் கொடுங்கோல் ஆட்சி நடத்த வேண்டியிருக்கிறது என ஷியாம்ஜி பதிலடி தந்தார். கொளையர்கள்தான் தங்கள் கொள்ளைக்காக செல்வம் ஓரிடத்தில் குவிந்து கிடக்க விரும்புவர். பரவலாக செல்வம் பிரிந்து கிடந்தால் கொள்ளையர்க்கு அது எளிதான வேலையாக இருக்காது என பிரிட்டிஷாரை சாடினார் ஷியாம்ஜி.

மகராஜா சாயாயி ராவ் கெய்க்வார் முற்போக்காக பேசிவருகிறார் என அறிந்த ஷியாம்ஜி அவர் இந்திய தேசிய காங்கிரஸ் தலைமையை எடுக்கலாம் என்றார். திலகருடன் சமஸ்தானங்கள் சேர்ந்து பணியாற்றினால் சக்திமிக்க இயக்கம் உருவாகும் என்ற ஆலோசனையை நல்கினார். ஷியாம்ஜியால் பரோடா கல்லூரியில் அரவிந்தர் வேலைக்கு சேரமுடிந்தது.

# 2

1896-97ல் புனா பெரும் பிளேக்கால் பாதிக்கப்பட்டது. வால்டர் சார்லஸ் ராண்ட் ஐ சி எஸ் பொறுப்பில் கமிட்டி ஒன்றை அமைத்தனர். பிரிட்டிஷ் அதிகாரிகள் உத்தரவில் வீடு புகுந்து மக்கள் சித்திரவதைக்கு ஆளாக்கப்பட்டனர். பெண்கள் மானபங்கப்படுத்தப்பட்டனர். வீட்டில் இருந்த கடவுள் உருவங்கள், பூஜை சாமான்கள் தூக்கி எறியப்பட்டன. விக்டோரியா ராணி பதவியேற்ற நாளின் டைமண்ட் ஜூப்லி கொண்டாட்டம் ஜூன் 22 1897ல் நடந்தது. அதில் பங்கேற்று திரும்பிக் கொண்டிருந்த ராண்ட் மற்றும் அவரின் காப்பாளர் அயெரெஸ்ட் ஆகியோர் சுடப்பட்டனர். இக்குற்ற செயலுக்காக புனே அருகில் உள்ள சாப்பா எனும் கிராமம் சார்ந்த சகோதரர்கள் தாமோதர் ஹரி, பாலகிருஷ்ண ஹரி ஆகியோர் மீது வழக்கு பதிவாகி அவர்கள் தூக்கிலிடப்பட்டனர்.

திலகர் கேசரி பத்திரிகையில் ராண்ட் நிர்வாகத்தின் மோசமான செயல்களை கண்டித்து எழுதினார். திலகரும் இதன் காரணமாக கைது செய்யப்பட்டார். 18 மாத காவலில் வைக்கப்பட்டார். ஷியாம்ஜி அதிர்ச்சியுற்றார். இந்தியாவில் இருந்துகொண்டு போராட முடியுமா என்கிற கேள்வி அவரை தொந்தரவு செய்தது. லண்டன் செல்வது என முடிவும் எடுத்தார் . 10 ஆண்டுகள் கழித்த பதிவில் **It is folly for a man to allow himself to be arrested by an unsympathetic Govt and thus be deprived of action when by anticipating matters he can avoid such events. Just 10 yeras ago when our friend Mr B G Tilak and Nathu brothers were arrested, we decided to leave India and settle in England".** இரக்கமில்லாத அரசாங்கத்திடம் கைதாகிவிட்டு தமது நடவடிக்கைகளை முடக்கிக் கொள்வது என்பதை அவர் மனம் ஏற்கவில்லை.

Herbert Spencer அவர்களின் Rationalism அப்போது லண்டனில் செல்வாக்கு பெறத்துவங்கியது. அனைத்துவகை கொடுமைகளையும் கண்டித்து வந்த அவர் சோசியாலஜி ஆய்வுகளையும் மேம்படுத்தி வந்தார். Radical Rationalists என்ற குழுவினருடன் லண்டனில் ஷியாமாஜிக்கு தொடர்பு ஏற்பட்டது. Right to freedom of Opinion என்பதற்காக அக்குழு போராடிக்கொண்டிருந்தது. 1899 போயர் யுத்தம் தருணத்தில் பிரிட்டிஷ் அரசு தெனாப்பிரிக்கா டிரான்ஸ்வால் மீது நடத்திய தாக்குதலை ஷியாம்ஜி கண்டித்தார். தென்னாப்பிரிக்காவில் காந்தி போன்றவர்கள் ஏகாதிபத்தியத்திற்கு உதவியிருக்கக்கூடாது என விமர்சித்தார்.

1903ல் தனது 'விடுதலை- பகுத்தறிவு' கருத்துக்களை ஹெர்பெர்ட் ஸ்பென்சரிடம் நேரிடையாக ஷியாம்ஜி பகிர்ந்துகொண்டார். ஆனால் அவரின் பிராஜக்டை ஏற்பதற்கு முன்னரே ஸ்பென்சர் டிசம்பர் 1903ல் இயற்கை

அடைந்தார். ஆக்ஸ்போர்டில் அவரின் நினைவு சொற்பொழிவு அறக்கட்டளை ஒன்றை நிறுவ 1000 பவுண்டுகள் நன்கொடையை ஷியாம்ஜி வழங்கினார். அவரது முதலாம் ஆண்டு நினைவு தினத்தில் இந்திய மாணவர்களுக்கு உதவும் ஸ்காலர்சிப் திட்டம் ஒன்றையும் அறிவித்தார். இங்கிலாந்து கல்விக்கு வரும் இந்திய மாணவர் ஒவ்வொருவருக்கும் பயண உதவித்தொகையாக ரு 2000 அளிப்பேன் என்றார். இதற்காக அறக்கட்டளை ஒன்றையும் துவங்க முயற்சிப்பேன் என்றார். அதற்கு ஒரு நிபந்தனையை அவர் விதித்தார் That an Indian Graduate holding a fellowship under the scheme shall not accept any post, Office, emouluments or service under the British Govt after his return to India. உதவித்தொகை பெற்று படிக்கவரும் மாணவர் பின் அரசாங்க பதவி எதையும் ஏற்கக்கூடாது என்பதில் அவர் உறுதிகாட்டினார்.

பயண உதவித்தொகையை மூன்று பெயரில் வழங்க முன்வந்தால் தாமும் உதவுவதாக 1905 நவம்பரில் எஸ் ஆர் ரானா அறிவித்தார். ஒன்று ராஜபுதன மேவார் நாயகன் ராணா பிரதாப், இரண்டாவது சத்ரபதி சிவாஜி, மூன்றாவது இந்தியாவிற்கு உதவிட நினக்கும் ஏதாவது இஸ்லாமிய ஆட்சியாளர் ஒருவர் பெயரில் என்பது அவர் அறிவிப்பு.

1905 டிசம்பரில் எட்மண்ட் பர்க், கணேஷ் வாசுதேவ் ஜோஷி ஆகியோரின் நினைவு சொற்பொழிவுகளை செய்தால் ரூ 1000 தரப்படும் எனவும் ஷியாம்ஜி அறிவித்தார். இதை சாவர்க்கர், பி சி லால், ஹர்தயாள் போன்றவர்கள் பயன்படுத்திக்கொண்டதாக அறிகிறோம். மதன்லால் திங்கரா, குதிராம் போஸ் ஆகியோர் ஊக்கத்தொகையை பயன்படுத்திக்கொண்டு இங்கிலாந்து சென்றனர். எகிப்து, அய்ரிஷ் தேசிய இயக்கங்களுடனும் ஷியாம்ஜி உறவுகளை வளர்த்துக்கொண்டார்.

1905 ஜனவரியில் Indian Sociologist ( an organ of freedom, Political, social and religious reforms) என்பதை கொணர்ந்தார் சியாமாஜி. அதன் மூதுரையாக "Resistance to aggression is not simply justifiable but imperative. Non rsistance hurts both altruism and egoism" என்றார். இக்குழுவினர் திலகரை தூக்கிப்பிடித்தனர். பிரிட்டிஷ் ஆட்சியை கடுமையாக தாக்கி எழுதினார் ஷியாம்ஜி. பிரிட்டிஷ் ஆட்சி செய்வதெல்லாம் கோரத்துரோகமே என ஸ்பென்சர் சொன்னதை எடுத்துக்காட்டினார். Sociology teaches us that the best defence of a slave against a cruel master is succeful falsehood" எனவே நீதி நியாயம் நேர்மை என எவரும் உபதேசிக்கவேண்டாம் என கடுமையான நிலையை எடுத்தார் ஷியாம்ஜி.

லண்டன் ஹைகேட் பகுதியில் ஷியாம்ஜி இல்லத்தில் டாக்டர் முத்து, ஜே எம் பரிக், டாக்டர் டி இ பெரெய்ரா, பரமேஷ்வர் வர்தி, ஜே சி முகர்ஜி, எம் ஆர் ஜெயகர் போன்றவர்கள் கூடி பிப்ரவரி 18, 1905ல் இந்தியன் ஹோம்ரூல்

சொசைட்டி என்கிற அமைப்பை உருவாக்கினர். இந்தியாவிற்கு சுயாட்சி, ஒற்றுமை, விடுதலை குறித்த விழிப்புணர்வை மக்களிடம் உருவாக்குதல் நோக்கம் என சொல்லப்பட்டது.. ஷியாம்ஜி தலைவராகவும், ஜே சி முகர்ஜி செயலராகவும் அறிவிக்கப்பட்டனர்.

முதலாண்டு நிகழ்வில் பெண்கள் உட்பட பலர் கலந்துகொண்டதாகவும் 150க்கும் மேற்பட்டவர் இங்கிலாந்து வர விருப்பம் தெரிவித்து உள்ளதாகவும் அமைப்பினர் அறிவித்தனர். அப்போதே 119 உறுப்பினர்கள் அமைப்பில் உள்ளதாக தெரிவித்தனர்.

ஷியாம்ஜி பிரிட்டிஷார் வெளியேற்றம் விரைவில் சாத்தியமே எனக் கருதினார். இந்திய மக்கள் போலீஸ் வேலையை, போஸ்ட்மேன் வேலையை, குப்பை அள்ளும் வேலையை ஒரு வாரம் நிறுத்தினால் போதும் அரசு நிலைகுலையும் என எழுதினார். நீங்கள் வன்முறை புரட்சி இல்லாமலேயே பிரிட்டிஷாரை நினைத்தால் வெளியேற்ற முடியும். அவர்களுடன் ஒத்துழைக்காதீர் என்றார். பிபின் சந்திர பால் சுற்றுப்பயணம் செய்து கருத்துக்களை மக்களிடம் கொண்டுபோகத்தயார் என கிளம்பினார். சாவர்க்கர், பாபட், மாதவராவ் ஜாதவ் போன்றவர்களை கல்வி உதவித்தொகை பெற்று லண்டன் சென்றிட திலகர் பரிந்துரைத்து அனுப்பினார். அவ்வாறு வருபவர்களுக்கு தங்கும் விடுதி ஒன்று தேவை என உணரப்பட்டது. கீழ்கண்ட அறிவிப்பை இந்தியன் சோசலாஜிஸ்ட் மே 1905ல் வெளியிட்டது. அப்படி ஒரு தங்கும் விடுதி வாங்கப்பட்டு அனைத்து வசதிகளுடன் இருப்பதை அவ்வறிக்கை மூலம் ஷியாம்ஜி வெளிப்படுத்தினார்.

"A freehold estate has been purchased at Highgate London, a part of Hornessy which according to offcial statistics is the healthiest suburb of London and which has the lowest death rate in UK. The property is situated close to trams, within easy reach of 3 railway stations and within a few minutes walk of waterloo Park, Highgate woods and queen woods, the house stands on its own grounds, and has at present accomodation for about 25 youngmen. Arrangements will ultimately be made to build and to take in 50 students. The lecture hall, library and reading room are all on the same floor, thus presenting every facility for study and inter communication. To provide recreation there is an ample space for tennis courts, gymnasuism etc"

India House எனப்பெயரிடப்பட்ட அவ்வீடு ஜூலை 1, 1905ல் திறக்கப்பட்டது. தாதாபாய் நௌரோஜி, லாலா லஜ்பத்ராய், மேடம் காமா, ஹன்ஸ்ராஜ், தோஸ்த் முகமது, ஹைண்ட்மேன், ஸ்வின்னி, மேடம் டெஸ்பர்ட் (அய்ரிஷ்) போன்ற முக்கியமானவர்கள் திறப்புவிழாவிற்கு வந்திருந்தனர். இந்தியாவின் உயர்விற்கும் விடுதலைக்கும் இவ்வில்லம் துணைநிற்கும் என பேசப்பட்டது.

ஷியாம்ஜி தேசபக்தி- முழுவிடுதலை எனப் பேசிவந்த கருத்துக்கள் இந்தியாவில் மிதவாதிகளுக்கு வேறுபட்ட உணர்வைத் தந்தது. பிரிட்டிஷார் '1857 கலகத்தின்' நினைவுகள் குறித்து கூட்டம் ஒன்றை லண்டனில் நடத்தினர். கிருஷ்ணா அதற்கு எதிர்வினை ஆற்றினார். அதே நாளில் ஷியாமாஜிக்கு வரவேற்பு என்கிற பெயரில் புரட்சிகரமானவர்கள் விருந்து ஒன்றிற்கு ஏற்பாடு செய்தனர். அதன் செய்தியை ஹைண்ட்மேன் தனது பத்திரிகையில் வெளியிட்டார். இரத்தம் சிந்துதல் மூலமே இந்தியா விடுதலை பெறமுடியும் என்கிற உணர்வு அக்கூட்டத்தில் மேலோங்கியிருந்தது. இந்தியாவில் 3 கோடி மக்கள் பஞ்சத்தாலும் பட்டினியாலும் செத்துள்ளனர். அடிமைகளாக இருப்பதைவிட கோடிக்கணக்கான மக்கள் தியாகம் செய்து விடுதலையை மீட்கமுடியும் என்றனர். தியாக மரணமாக கூட இருக்கட்டுமே என்கிற எண்ணம் மேலோங்கிவந்தது. நமக்கு துப்பாக்கி குறித்தும் இராணுவப் பயிற்சி குறித்த அறிவும் தேவை என்பது உணரப்பட்டது. சிகப்பு நிறத்தில் கீழ்கண்ட வாசகங்கள் கொண்ட அழைப்பிதழ் அடிக்கப்பட்டிருந்தது.

***Bande Mataram***
***To commemorate the anniversary of***
***The***
***Indian National Rising***
***of 1857***
***A Meeting of Indians in England***
***will be held at***
***India House***
***65, Cromwell Avenue, Highgate N***
***on sunday the 10th May, 1908,***
***at 4PM precisely***
***You and all Your Indian Friends are cordially invited to be present***

சிலர் மட்டுமே ஆன அவர்கள் நம்மை ஆளமுடிகிறது. இந்தியர்கள் உதவியில்லாமல் நம்மை ஆளவே முடியாது என ஷியாமா பேசிவந்தார். நமக்கு mentally, morally, Physically ஆங்கில கல்விமுறையால் தீங்கு விளைந்துள்ளது. டாக்டர் ராபர்ட் வாலஸ் என்பார் கண்டனம் செய்து எழுதிய The seamy side of Imperialism என்கிற கட்டுரையை ஷியாம்ஜி எடுத்துக்காட்டினார்.

நாகரீகப்படுத்துவதாக சொல்லும் பிரிட்டிஷார் நம்மை நிரந்தர குழந்தைப்பருவத்திலேயே வைக்க விரும்புகிறார்கள். தனிநபர் சுதந்திரம்

இருப்பதாக ஏமாற்றுகிறார்கள். பத்திரிகை நடத்திய பட்டதாரி இந்தியன் ஒருவர் 6 மாத சிறையில் இருக்கிறார். சுரேந்திர பானர்ஜி வந்தே மாதரம் என ஊர்வலம் விட்டதால் சிறையில் வைக்கப்பட்டார். இந்தியர்களை தங்களின் தனிப்பட்ட சொத்து மாதிரி நடத்த விழைகிறார்கள். காங்கிரசாரே நீங்கள் முதலில் 'ஆங்கிலோஇந்தியர்களை' விட்டு வெளியே வாருங்கள். ஹுயூம், வெட்டர்பர்ன் ஆகியோரை வெளியேற்றி ஹைண்ட்மேன் போன்றவர்களை நட்பாக்கி கொள்ளுங்கள் எனப் பேசினார் ஷியாமாஜி.

மார்லே குறித்து மிதவாதிகள் நம்பிக்கையை தெரிவித்து வந்தனர். ஹெர்பர்ட் ஸ்பென்சர் குழு சார்ந்தவர்- கிளாட்ஸ்டோன் வாழ்க்கையை எழுதியவர். அப்படிப்பட்ட மார்லே இந்திய செயலர் ஆகியுள்ளார் என்று அவர்கள் நம்பிக்கை சென்றது. ஆனால் ஷியாம்ஜி இதனை விமர்சித்தார். நம்மை ஆள்பவர் ஆள்பவரே - அவர் எவராக இருந்தாலும் ஆள்பவரே என்றார். அவர் எவ்வளவு நல்லவராக இருந்தாலும் இந்த சிஸ்டத்திற்குள் நிற்கவேண்டியவராக இருக்கிறார் - மாயை எதற்கு என வினவினார்.

# 3

வாரணாசியில் 1905ல் காங்கிரஸ் கூடும்போது திலகரையே தலைவராக தேர்ந்தெடுக்கவேண்டும் என கருத்து தெரிவித்தார் ஷியாம்ஜி. ஆனால் கோகலேதான் ஹியூம் உதவியுடன் தேர்ந்தெடுக்கப்பட்டார். லண்டன் இந்தியன் சொசைட்டி சார்பில் கோகலேவிற்கு வரவேற்பு கொடுக்கப்பட்டபோது அதை ஷியாம்ஜி விமர்சித்தார். "It could not but create a genuine indignation in the minds of all ture Indians that a man like Mr Gokhale who had secured titles and emouluments in consequence of a most object and unqualified apology, was held up as a model Indian by some of his countrymen" கோகலேவைப்போய் இந்தியருக்கு மாடல் என்று சொல்வதை ஏற்கமுடியாது என ஷியாம்ஜி விமர்சித்தார்.

இங்கிலாந்தில் தாதாபாய் தேர்தலில் நின்று 1906ல் தோற்றபோது, மகிழ்ச்சி என எழுதினார் ஷியாமாஜி. இந்தியர் ஒருவர் பாராளுமன்றம் போய் நமது நலன்களை மேம்படுத்திவிடமுடியாது என்கிற தனது அவநம்பிக்கையை அவர் வெளிப்படுத்தினார். தாதாபாய்க்கு எவரும் நிதிகொடுத்து இருக்க மாட்டார்கள் என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால் இந்த பாராளுமன்றத்திற்கு நிற்கிறேன் என்கிற பெயரில் இந்தியர்கள் செலவு செய்த பணத்தில் நூற்றுக்கணக்கான இந்தியர்கள் உயர் கல்வி பெறும்வகையில் நல்ல தேசிய பல்கலைகழகத்தை ஏற்படுத்தியிருக்கலாம் என்றார் ஷியாம்ஜி.

வாரணாசியில் மாளவியா கொணர்ந்த சுதேசி தீர்மானம் ஏற்கப்படவில்லை. பகிஷ்கரிப்பு இயக்கம் நிலைமை தீவிரமாக இருக்கும்போது மட்டுமே நடைபெறவேண்டும் என மிதவாதிகள் அதை நிராகரித்தனர். வேல்ஸ் அரசரை வரவேற்கும் தீர்மானத்தை திலகர் , லாலாஜி எதிர்த்தனர். கோகலே லாலாஜி இருவரும் பேசி ஒருமித்த தீர்மானம் என ஒன்றை அறிவிக்கவேண்டும் என முடிவானது.

வங்கத்தில் சுதேசி, வந்தே மாதரம் இயக்கம் தீவிரமானது. திலகர் கல்கத்தா சென்றார். திலகரை தலைவராக்க பிபின் முயற்சி எடுத்தார். மிதவாதிகள் தலைவருக்கு தாதாபாய் என்றனர். ஷியாம்ஜி தாதாபாயிடம் தாங்கள் பொறுப்பை எடுக்கவேண்டாம் என்றார். ஆனால் தாதாபாய் கல்கத்தா மாநாட்டில் தலைமைப் பொறுப்பை எடுத்தார். தாதாபாயின் மறுக்கமுடியாத சேவைகளை புகழ்ந்தாலும் அவர் இவ்வாறு எடுத்துக் கொண்டிருக்கக்கூடாது என ஹைண்ட்மேனுக்கு தனது நிலைப்பாட்டை விளக்கி ஷியாமா கடிதம் எழுதினார். இந்தியன் சோசியலாஜிஸ்ட் நவம்பர் 1906இதழில் தாதாபாய் the new enemy of our country எனவும் எழுதினார்.

ஷியாம்ஜியின் கருத்துக்களை இந்தியாவில் வந்தே மாதரம், அமிர்த பஜார் பத்திரிகா ஆகியவை எத்ரொலித்தன. பிபினையும் திலகரையும் புகழ்ந்து ஷியாமா எழுதினார். இவர்கள் இருவரும் மூன்று மாதங்கள் இந்தியா முழுக்க சென்று உரையாற்றிவந்தால் விடுதலை எழுச்சி இரட்டிப்பாகும் என்ற நம்பிக்கையை முன்வைத்தார் ஷியாம்ஜி.

நாக்பூரில் மிதவாதிகள் எதிர்ப்பு ஆர்ப்பாட்டம் ஒன்றில் 2000 பேர் பங்கேற்றனர். ராய்ப்பூரில் மிதவாதிகள் வந்தே மாதரம் பாட அனுமதிக்கமுடியாது என்கிற நிலையை எடுத்தனர். அரை டஜன் மிதவாதிகள் காங்கிரசை அடக்கி ஆள நினைக்கிறார்கள் என்கிற கண்டனத்தை ஷியாம்ஜி தந்தார்.

லாலாஜி மாண்டலே சிறையிலிருந்து ஆறுமாத தண்டனை அனுபவித்து நவம்பர் 1907ல் வெளிவந்தார். அடுத்து தலைமைக்கு லாலாஜியா டாக்டர் ராஷ் பிகாரி கோஷா என்கிற பிரச்சனை எழுந்தது. சூரத் மாநாட்டில் ராஷ் பிகாரி மிதவாதிகளின் செல்வாக்கால் தேர்ந்த்தெடுக்கப்பட்டார். டிசம்பர் 27 1907ல் காங்கிரசில் கொந்தளிப்பு ஏற்பட்டது. ராஷ் பிகாரி The extremists party is an ominous shadow that has projected itself over the fortune of India. It has no place within the pale of the Congress என உரை நிகழ்த்தினார். ஷியாம்ஜி, திலகர் ஆகியோர் தன்னை கண்டித்து எழுதிவருவதை கோகலே பத்திரிகை செய்தியில் சுட்டிக் காட்டினார். ஷியாம்ஜியின் விடுதலை குறித்த கருத்துக்களை தவறு என நிரூபிக்க தயாரா என கோகலேவிற்கு கடிதங்களை ஷியாமா ஆதரவாளர்கள் எழுதினர். மிதவாதிகள் ஏன் மெளனமாக இருக்கின்றனர் என அவர்கள் கேள்வி எழுப்பினர்.

லண்டனில் ஹோம் ரூல் சொசைட்டியின் மாநாடு பிப்ரவரி 23 1907ல் கூட்டப்பட்டது. இந்திய அரசியல் தொண்டர்கள் திறம்பட செயலாற்ற நல்ல அமைப்பு உருவாக்கப்பட்டால் தான் ரூ 10000 அனுப்புவதாக ஷியாம்ஜி அறிவித்தார். திலகர், பிபின், கார்படே ஆகியோர் இணைந்து ஷியாம்ஜி திட்டத்தை அவர் சொல்படி நிறைவேற்றத் தயார் என திலகர் ஏப்ரல் 4 1907ல்கடிதம் எழுதினார்.

பாய் பரமானந்தா மூலம் ஹர்தயாள் ஷியாம்ஜிக்கு அறிமுகமாகிறார். ஷியாமாவின் திட்டத்தை ஆதரித்து அவர் வேண்டுகோள் கொடுக்கிறார். உயிரையும் தியாகம் செய்திட சித்தமான கமாண்டோஸ் போன்றவர்கள் நமக்கு அரசியல் பணிக்கு வேண்டும் என்பது அச்சூழலில் விடப்பட்ட அழைப்பாக இருந்தது.

ஷியாம்ஜியின் ஆலோசனைப்படி 4 அடுக்குமுறை கமிட்டிகள் உருவாக்கப்பட்டன. Central committee (அந்தரங்க சபா), Body of Missionaries

(பக்தர்கள்) , Body of workers (ஷகாயக்), Body of sympathisers (மித்ருக்கள்) என்று உறுப்பினர்களை அவர்களின் விழிப்புணர்வு அடிப்படையில் எடுத்துக்கொள்ளும் கமிட்டி அமைப்பது . சுயராஜ்யம் இலக்கு - அதற்கான போராட்டம் என்றனர். பஞ்சாப்., அலகாபாத் பகுதிகளில் அவ்வமைப்பிற்கு ஆதரவான செயல்பாடுகள் தொடங்கின. ஸ்வராஜ்யா எனும் வாரப் பத்திரிகையும் வரத்துவங்கியது.

சூரத் மாநாட்டில் ஏற்பட்ட பிளவை ஷியாம்ஜி, ஹைண்ட்மேன் ஆகியோர் வரவேற்று இருந்தனர். திலகர் நன்றி தெரிவித்து பிப்ரவரி 1908ல் ஷியாம்ஜிக்கு கடிதம் எழுதினார். ஹர்தயாள் பஞ்சாபில் என்ன செய்யவேண்டும் என அறிவுறுத்தப்பட்டுள்ளார் என திலகர் அதில் குறிப்பிட்டிருந்தார். அங்கு அவர் பெரும் தலைவராக உருவெடுப்பார் என்கிற நம்பிக்கையையும் வெளியிட்டிருந்தார்.

மதுக்கடை முற்றுகைப்போர் என திலகர் நடத்தினார். ஆர்ப்பாட்டத்தில் 12000 மக்கள் பங்கேற்றனர். தாலுகா அளவு அமைப்புகள் என திலகர் முன்மொழிந்து ஆரம்பிக்கத் துவங்கினார். ராஷ்ட்ரமாதா எனும் நாளிதழ் வந்தது. ஷியாம்ஜி அரசாங்கம் தரும் ஒடுக்குமுறைகளை எதிர்கொள்ள டால்ஸ்டாயின் Passive Resistance என்பதை எடுத்துக்கொள்ளலாம் என்றார். டைம்ஸ் பத்திரிகை ஆயுதம் தாங்கிய புரட்சிக்கு இவர்கள் நிற்கிறார்கள் என்று எழுதியபோது, அதை மறுத்து ஷியாம்ஜி விளக்கமளித்தார். நாங்கள் எங்கும் அவ்வாறு சொல்லவில்லை. அதே நேரத்தில் ஆயுதப்போராட்டத்திற்கு கொள்கை பூர்வ எதிர்ப்பும் எங்களிடம் இல்லை என விளக்கமளித்தார். நிலைமைக்கு ஏற்பத்தான் போராட்ட வடிவங்கள். அந்நியராட்சியை அகற்ற இந்தியர்கள் ஆயுதம் ஏந்த வேண்டியதில்லை என்றே கருதுகிறோம் எனவும் ஷியாமா பதிலைத் தந்தார்.

முசபர்நகர் பகுதியில் வங்கம் சார்ந்தவர்கள் தங்கள் எதிர்வினையாகத்தான் குண்டு வீசினார்கள் என ஏப்ரல் 30 1908 நிகழ்விற்கு திலகர் விளக்கம் தந்தார். திலகர் ராஜத்துரோகம் குற்றம் சாட்டப்பட்டு ஜூலை 23, 1908ல் 6 ஆண்டுகள் சிறை வைக்கப்பட்டார். ஆகஸ்ட் 1908 இந்தியன் சோசலாஜிஸ்ட் இதழை கருப்பு நிற பார்டருடன் ஷியாம்ஜி கொணர்ந்தார். கோகலே இந்நிகழ்வு குறித்த விவாதத்தின்போது இருந்தும் ஏதும் செய்யவில்லை என கண்டித்தார் ஷியாம்ஜி. தேசபக்தர்கள் எவரும் சோர்ந்துவிடாமல் சக்தியை இரட்டிப்பாக்கி போராடுங்கள் என அறிக்கை வெளியிட்டார்.

Humanity of Paris எனும் பத்திரிகையின் எடிட்டர் அவரிடம் கேள்வி ஒன்றை எழுப்பினார். தங்கள் முன்மொழியும் திட்டம்தான் என்ன என்பது கேள்வி. அதற்கு ஷியாமா தந்த பதில் “ I think that the day, when English shall find no Indian

any longer to serve as a policeman or soldier or as lower functionaries, when the English Resident will not be able to find even a cook to prepare his meals, her domination will near to its end. Our plan is that of boycott not of simple commercial boycott, but war without mercy against all those who came from masters and refusal to be of help to them in whatsoever it may be. அதாவது பகிஷ்கரிப்பு. வெறும் வர்த்தகம் சார்ந்த பகிஷ்கரிப்பல்ல. அனைத்து மட்டத்திலும் புறக்கணிப்பு- மறுப்பு என்றார்.

So long as free agitation was allowed, the resort to violent practices was not necessary. But every fresh measure of repression and aggression, imposes on Indian Patriots a corresponding duty to make futile the efforts of the alien despotism by employing all such means as may advance the cause of Indian Independence". ஜனநாயகபூர்வ இயக்கங்களுக்கு தடை ஏதும் இல்லாமல் இருந்தால் தீவிரவாத இரகசிய இயக்கங்களுக்கு தேவையிருக்காது என்பது அவர் தந்த விளக்கமாக இருந்தது.

பிபின் சந்திர பால் மிண்டோ- மார்லி சீர்திருத்தங்கள் குறித்து அரசாங்கத்துடன் விவாதிப்பதோ நமது கருத்துக்களை எடுத்துரைப்பதோ தவறல்ல என்ற நிலைப்பாட்டை எடுத்தார். இதைக் கடுமையாக கண்டித்தார் ஷியாம்ஜி. நம்மை பிபின் கைவிட்டுவிட்டார் என்றார். எனது பழைய நண்பருக்கு எதிராக நான் பேசவில்லை புதிய பகைவரான பிபின் குறித்தே விமர்சிக்கிறேன் என்றார்.

ஜூலை 1909ல் மதன்லால் திங்கரா வில்லியம் கர்சான் வைலியை கொலை செய்தார். இங்கிலீஷ்காரரர் இரத்தம் சிந்த செய்ததன் மூலம் இந்தியர் படுகின்ற கொடுமைக்கு தான் பழிவாங்கியதாக திங்கரா ஒப்புக்கொண்டார். அவர் பெண்டன் சிறையில் ஆகஸ்ட் 17, 1909ல் தூக்கில் ஏற்றப்பட்டார். மதன்லால் தியாகத்தை புகழ்ந்து புரட்சிகரவாதிகள் அறிக்கை ஒன்றை வெளியிட்டனர்.

ஷியாம்ஜி மீது சந்தேக நிழல் படர்ந்தது. பாரீசில் இருந்த ஷியாமை உடன் வெளியேற்றவேண்டும் - வழக்கு விசாரணைக்கு உட்படுத்தவேண்டும் என பிரிட்டிஷ் பத்திரிகைகள் எழுதின. பாரீசில் இக்கொலையை தான் கண்டிப்பதாக ஷியாம்ஜி பேசினார். அரசியல் கொலைகள் மூலம் சாதிக்க முடியாது என்றார். ஷியாம்ஜியின் கருத்துக்கள் பலரை திகைக்க செய்தன. சாவர்க்கர் கடுமையாக விமர்சித்து அவருக்கு கடிதம் அனுப்பினார். அனைவரின் விமர்சன கணைகளைப் பெற்றுக்கொண்டு டைம்ஸ் பத்திரிகைக்கு நீண்ட கடிதம் எழுதினார் ஷியாம்ஜி.

"..although I have had no connection with the assasination in question, which was committed on political grounds, I frankly approve of the deed and regard its authour as a martyr in the cause of Indian Independence. As a small token of our respect and esteem for the glorious

stand he had made by staking his life, we in our humble capacity propose to honour his name by grants of four scholarships" எனக்கு அக்கொலையில் எவ்வித தொடர்பும் இல்லை எனினும் அத்தியாகியின் செயல் எனக்கு உடன்பாடான ஒன்றே என்றார்.

சரோஜினிநாயுடு அவர்களின் சகோதரர் விரேந்திரநாத் சட்டோபாத்யாய மார்ச் 4, 1909ல் டைம்ஸ்க்கு எழுதினார். அரசியல் கொலைகள் அவசியம் என நான் நம்பத்துவங்கிய கணமே எழுதுவதை நிறுத்திவிட்டு தாய் நாடு திரும்புவேன். அதை அமுல்படுத்துவேனே தவிர நான் பாதுகாப்பாக அய்ரோப்பாவில் தங்கிக்கொண்டு இருக்கமாட்டேன். ஷியாம்ஜிக்கான விமர்சனமாக இக்கருத்து இருந்தது. பின்னர் இவ்வாறு தான் எழுதியதற்கு சட்டோ வருத்தம் தெரிவித்தார்.

ஷியாம்ஜியின் பத்திரிகையை அச்சடித்தவர்களான ஆர்தர் போர்ஸ்லே, அல்டெர்ட் ஆகியோர் தேசத்துரோக வழக்கில் சிறைக்கு அனுப்பப்பட்டனர். ஷியாம்ஜி லண்டன் சொத்துக்களை விற்றுவிட்டு பிரான்சில் தனது பத்திரிகையை துவங்கினார். சர்தார் சிங் ராணா, மேடம் காமா ஆகியோர் ஏமாற்று வீரர்கள் என்கிற விமர்சனத்தை வைத்தனர். அவர் மீது அதிருப்தி கொண்டவர்கள் ஹர்தயாள் பொறுப்பில் 'வந்தேமாதரம்' பத்திரிகை துவங்கினர்.

1910-11 காலத்தில் ஜெர்மனியை எதிர்த்து இங்கிலாந்தும் அமெரிக்காவும் உடன்பாடு காண பேச்சுவார்த்தை நடத்திவந்தனர். அப்படி ஓர் உடன்பாட்டிற்கு வரவேண்டாம் என அமெரிக்க அதிபருக்கு ஷியாமா ஏப்ரல் 1911ல் பகிரங்க கடிதம் எழுதினார். அமெரிக்காவிலிருந்த அய்ரிஷ் இயக்கத்தார் ஷியாம்ஜியை இதற்கென கொண்டாடினர். அமெரிக்க செனட்டும் அப்படி ஓர் உடன்பாடு வருவதை எதிர்த்ததால் ஷியாம்ஜி புகழ் அடைந்தார்.

சிவாஜி, ராணா பிரதாப் பெயரில் மட்டுமில்லாமல் அக்பர், திப்பு சுல்தான், பகதூர்ஷா ஜாபர் பெயரிலும் ஷியாம்ஜி ஸ்காலர்ஷிப் வழங்கினார். சுக்ரவர்தி ஷியாம்ஜியின் ஹோம்ரூல் இயக்கத்தில் 1905ல் உதவித்தலைவராக இருந்தார். இந்துக்களும் இஸ்லாமியரும் ஒற்றுமை உணர்வு கொண்டு செயல்படவேண்டும். பிரிட்டிஷாரின் பிரித்தாளுதலுக்கு இடம் கொடுக்ககூடாது என்ற எண்ணம் இருந்தது. முஸ்தபா கமால் பாஷா லண்டன் வந்தபோது கொடுக்கப்பட்ட வரவேற்பில் ஜூலை 24, 1907 ஷியாம்ஜியும் பங்கேற்றார். எகிப்திய தேசபக்தர்களுக்கு ஆதரவு கொடுப்போம் என்றார். கமால் பாஷாவும் அறிவியல் மற்றும் அறிவுபெருக்கம் நம் அனைவருக்கும் தன்னாட்சியை நல்கும் என்று உரையாற்றினார்.

எகிப்து, இந்தியா, அயர்லாந்து இயக்கங்கள் ஒன்றுபட்டு பிரிட்டிஷ் எதிர்ப்பில் நிற்கவேண்டும் என ஷியாம்ஜி பேசிவந்தார். 1914ல் ஜெனிவாவிலிருந்து எம் எம் ரிபாட் பொறுப்பில் La partie Egyptienne என்கிற பத்திரிகை வந்தது. ஷியாம்ஜி தொடர்பு கொண்டு ரிபாட் கட்டுரைகள் பலவற்றை தனது பத்திரிகையில் வெளியிட்டார். டாக்டர் சன் யாட்சன் இயக்கத்தின் அனுபவங்களை கணக்கில் கொள்ள வேண்டும் என்றார் ஷியாம்ஜி.

1910ல் பாரீசில் ஜாவா- சுமத்ரா தலைவர் டெக்கர் அவர்களை சந்தித்து அந்நிய ஆட்சிக்கு எதிராக அவர்கள் போராட்டத்தில் இறங்கினால் தன் ஆதரவை தருவதாக உற்சாகப்படுத்தினார்.. டெக்கரும் ஜாவா சென்று பாண்டுங் எக்ஸ்பிரஸ் எனும் பத்திரிகையை துவங்கினார். தேசிய கட்சி ஒன்றையும் துவங்கினார். ஆனால் 1913ல் டெக்கர் நாடுகடத்தப்பட்டார். அவர் பின்னர் பெர்லின் வந்து சேர்ந்து அனைத்து ஆசிய விடுதலை இயக்கத்தை பலப்படுத்த முயற்சித்தார்.

ஜெர்மனியில் செண்பக(சம்பக)ராமன் பிள்ளை போன்றவர் தீவிரமாக செயல்பட்டு வந்தனர். தமிழராகிய ராமன் பிள்ளை பொறியியல் படிக்க ஜூரிச் வந்தார். ஸ்டிக்லாண்ட் என்பாரின் தத்துப்புத்திரனாக ராமன்பிள்ளை வளர்ந்தார். ஸ்டிக்லாண்ட் ஷியாம்ஜியுடன் தொடர்பில் இருந்தார். பிள்ளை துவங்கிய International Pro India Committee ல் ஸ்டிக்லாண்ட், ஷியாம்ஜி ஆகியோர் உறுப்பினர்களாகவும் இருந்தனர்.

1915ல் இந்தியன் நேஷனல் பார்ட்டி என்கிற பெயரில் பெர்லினில் விரேந்திரநாத் சட்டோபாத்யாய், தாரக்நாத் தாஸ், ஹர்தயாள், பரகதுல்லா ஆகியோர் இயங்கிவந்தனர். பிரிட்டிஷ் எதிர்ப்பு பிரசுரங்களை அவர்கள் கொணர்ந்தனர். ஆயுதங்களை இந்தியாவிற்கு அனுப்பவும் உதவிக்கொண்டிருந்தனர்.

1914 ஜூனில் ஷியாம்ஜி ஜெனிவா சென்றார். தனது தலைமையிடமாக ஜெனிவா இருக்கும் என இந்தியன் சோசியாலஜி இதழில் அறிவித்தார். பிரான்சில் தொடர்ந்து இருக்கமுடியாமல் பிரச்சனை வரலாம் என உணர்ந்து இடத்தை மாற்றிக்கொண்டதாகவும் அறிவித்தார். ஆனால் முதல் உலகப்போர் காலத்தில் பத்திரிகை நடத்துவதற்கும் கருத்து சுதந்திரத்திற்கும் ஏற்பட்ட பல்வேறு தடைகள் அவரை தனது பத்திரிகையை கொணரவிடாமல் தடுத்தன.

இந்தியாவிலும் நிலைமைகள் மாறத்துவங்கின. 1915ல் தென்னாப்பிரிக்காவிலிருந்து வந்த காந்தியார் செல்வாக்கு பெருகத்துவங்கியது. அவரும் அகிம்சைவழி ஒத்துழையாமை என பிரிட்டிஷாருக்கு எதிராக போராடிக்கொண்டிருந்தார். சம்பரான் சத்தியாக்கிரகம்

, கேதா போராட்டம் அவரது மரியாதையை உயர்த்தியிருந்தன. 1919 ரெளலட் சட்டம் பாய்ந்தது. காந்தியும் ஏற்பட்ட அனுபவங்களின் அடிப்படையில் 1920ல் ஒத்துழையாமையை அறிவித்தார். முஸ்லீம் லீகும் ஆதரவாக நின்றது. ஆனால் ஸ்ரீநிவாசா சாஸ்திரி, சாப்ரு, வாச்சா, சுரேந்திர பானர்ஜியா, சிந்தாமணி ஆகியோர் தங்கள் அதிருப்தியை தெரிவித்தனர். காந்தியை Nihilist என விமர்சித்தனர்.

1921ல் காந்தியை சில புரட்சிகரவாதிகள் சந்தித்து பேசியதாக கணேஷ் லால் பதிவு சொல்கிறது. ஷியாம்ஜியும் திலகர் பெயரில் நினைவு சொற்பொழிவு நிதியாக ரூ10000 தருவதாகவும் , அது காந்தியின் மேற்பார்வையில் செலவிடப்படவேண்டும் என அறிவித்ததாகவும் அப்பதிவில் காணமுடிகிறது. காங்கிரசே உரையாற்றுபவர் யார், எவ்விடத்தில் என தேர்ந்தெடுத்துகொள்ளலாம் எனவும் ஷியாம்ஜி அறிவித்தார்.

லீக் ஆப் நேஷன்ஸ் என்பதில் இந்தியா இணைக்கப்பட்டது என்பதையும் ஸ்ரீநிவாச சாஸ்திரி போன்றவர் அதில் பங்கேற்றதையும் ஷியாம்ஜி ஏற்கவில்லை. இது தொடர்பான தனது விமர்சனத்தை அவர் எச் ஜி வெல்ஸ் அவர்களுக்கு எழுதினார். அப்பங்கேற்பு பெரும் மோசடி எனக் குறிப்பிட்டார்.

# 4





1920களின் துவக்கம் ஷியாமாஜியை சோர்வுகொள்ள வைத்தது. திலகர் 1920ல் மறைந்தார். ஷியாம்ஜிக்கு நேசமாக நின்ற ஹைண்ட்மேன் 1922ல் மறைந்தார். செப்டம்பர் 1922 உடன் முற்றிலுமாக இந்தியன் சோசலாஜிஸ்ட் நின்றது. அதற்கு விடைகொடுப்பதாக ஷியாம்ஜி அறிவித்தார். 1923களில் செண்பகராமனுடைய பணிகளுக்கு உற்சாகமாக துணைநின்றார். இண்டியன் இண்டிபெண்டென்ஸ் பத்திரிகை வளர அவருக்கு துணைநிற்பதாக தெரிவித்தார்.

சோவியத் துணையுடன் பிரஸ்ஸல்ஸ் பகுதியில் அனைத்து ஒடுக்கப்பட்டோர் மாநாடு நடைபெற்றது. தேசிய விடுதலைக்காக ஏகாதிபத்திய எதிர்ப்பு லீக் என்கிற அமைப்பை உருவாக்கினர். அதன் சர்வதேச அலுவலகத்திற்கு விரேந்திரநாத் செயலராக்கப்பட்டார். அவர் ஷியாம்ஜியுடன் கடிதப்போக்குவரத்தில் இருந்தார்.

1930களின் துவக்க நாட்களிலேயே சுகவீனமுற்றார் ஷியாம்ஜி. மருத்துவ வசதிகளாலும் அவரை காப்பாற்ற முடியவில்லை. தனது மனைவியின் அருகாமை ஆறுதலில் அவர் மார்ச் 31, 1930ல் மரணமுற்றார்.

பிரிட்டிஷாருக்கு எதிராக அவர் சோசலிஸ்ட்கள், கம்யூனிஸ்ட்கள், பலநாடுகளின் தேசபக்த புரட்சியாளர்கள் தொடர்பில் தான் மறையும்வரை இருந்தவர் ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா. பிரிட்டிஷாரை இந்தியாவிலிருந்து

வெளியேற்றுதல் என்கிற ஒரே இலக்கு கொண்டு அவர் நண்பர்களை தேர்ந்தெடுத்துக்கொண்டார்.

ஷியாம்ஜி கட்டுமான உடல் அமைப்பை பெற்றிருந்தார் என அவரின் நண்பர்கள் சொல்வர். பணம் படைத்தவராக இருந்தாலும் தன் அளவில் எளிமையை கடைப்பிடித்தார் எனவும் அவரை உணர்ந்தவர்கள் சொல்கின்றனர். சட்டை பட்டன்கள் தங்கத்தில் அணியாமல் இருந்ததே அவரின் எளிமை என சொல்வாரும் உண்டு. ஜெனிவாவில் இருந்தபோது அவர் ஸ்டாக் எக்ஸ்சேஞ்சுக்கு தினம் செல்வார் என இந்துலால் யாக்னிக் தெரிவித்துள்ளார். நண்பர்கள் விருந்து பின் தியேட்டர் என வரை வற்புறுத்தும் போதெல்லாம், விருந்துக்கு வரமுடியும் தியேட்டருக்கெல்லாம் நேரமில்லை என்பாராம்.

ஜப்பானிய கம்பெனிகள் சிலவற்றிற்கு கடன் கொடுக்குமளவு அவருக்கு வசதி இருந்ததாகவும் அறியமுடிகிறது. அதன்மூலம் அவர் தங்க அறுவடை செய்தார் எனவும் கணேஷ்லால் பதிவு சொல்கிறது. அவர் தனது வருவாயில் அய்ந்தில் ஒருபாகத்தை மட்டுமே தன் செலவிற்கு என ஒதுக்கிக்கொள்வாராம். குழந்தைகள் நலன் என எவர் வந்தாலும் சிக்கனம் பாராமால் செலவிடுவாராம்.

அவர் பலநேரங்களில் அஞ்சாமையுடன் செயல்பட்டு இருக்கிறார். அவரிடம் ஒருமுறை பிரதமர் கிளாட் ஸ்டோன் முகம்தியர் ஆட்சியைவிட எங்கள் ஆட்சி மேலானதல்லாவா எனக்கேட்டபோது அப்படியெல்லாம் ஒன்றுமில்லை என்றாராம். இஸ்லாமியர் பின்புறம் குத்தினார்கள்- நீங்கள் வயிற்றில் அடிக்கிறீர்கள் என்கிற பதிலை ஷியாம்ஜி அளித்துள்ளார்.

மற்றவர்க்கு புரட்சிகர வாழ்வு என உபதேசித்துவிட்டு சொகுசுவாழ்வை ஷியாம்ஜி வாழ்ந்தார் என்கிற குற்றசாட்டு அவர் மீது எழாமல் இல்லை. இளைஞர்களை தவறாக இழுத்துவிடுகிறார் ஷியாமா என்கிற விமர்சனத்தை அன்னிபெசண்ட் வைத்தார். என் வயது, உடல் சுகவீனம், இயல்பு இவற்றின் காரணமாக என்னால் சிலவற்றை செய்ய இயலாமல் இருக்கலாம். ஆனால் நான் விரும்பும் சிலவற்றை செய்யும் ஆர்வலர்கள் இருந்தால் அவருக்கு துணையாக நிற்பேன் என அன்னி பெசண்டிற்கு ஷியாமா பதிலைத் தந்தார்.

அவரின் துணைவியார் பானுமதி ஏறத்தாழ 50 ஆண்டுகளுக்கு மேலாக கணவருடன் பல்வேறு நாடுகளின் சூழலுக்கேற்ப உடன் நின்றார். வீட்டிற்கு வருவோருக்கு உபசரிப்பு செய்வது பெரும் வேலையாக இருந்தது. அவர் ஆங்கிலமும் பிரஞ்சும் சரளமாக பேசக் கற்றுக்கொண்டார். தனது கணவருடன் தொடர்புடைய அனைத்து போராளிகளுடன் சகஜமாக

உரையாடும் ஆற்றலைப் பெற்றிருந்தார். கணவர் மறைவிற்கு பின்னர் அவரின் நினைவாக ஜெனிவா பல்கலைக் கழகத்திற்கு 10000 ஸ்விஸ் பிராங்கை வழங்கினார். ஜெனிவா மருத்துவமனைக்கு 10000 ஸ்விஸ் பிராங்குகளை வழங்கினார். அப்பணம் ஏழைகளுக்கு மருத்துவம் பார்க்க நிதியாகட்டும் என்றார். ஷியாம்ஜியின் பெரும் சமஸ்கிருத ஓரியண்டல் நூலகத்தை சோர்பான் இந்தியன் சிவிலிசேஷன் இன்ஸ்டிட்யூட்டிடம் ஒப்படைத்தார். University of Sorbonne க்கு படிக்க வரும் இந்திய மாணவர்களுக்கு உதவ 20 லட்சம் பிரஞ்சு பிராங்கை அறக்கட்டளை மூலம் வழங்கினார் பானுமதி அம்மையார். ஆகஸ்ட் 22, 1933ல் அவ்வம்மையாரும் ஜெனிவாவில் இயற்கை எய்தினார்.

ஷியாம்ஜி மரணமுற்ற தருணத்தில் இருந்த ஒரே இந்தியர் சிவ பிரசாத் குப்தா. அவர் வாரணாசியில் தினக்குரல் எனும் பத்திரிகையை நடத்திவந்தார். பிராங்க்பர்ட் சென்று வருகையில் அவர் ஷியாமாவை பார்க்க வருகை புரிந்திருந்தார். அவர்தான் பாரிசில் இருந்த ஷியாமாவின் நண்பர்களுக்கு அவரின் மரணம் குறித்து செய்தி அனுப்பினார். சர்தார் சிங் ராணா செய்தி அறிந்து ஜெனிவா சென்றார். ராணா சகோதரர் போல் உடன் நின்று பானுமதி அம்மையாருக்கு ஷியாம்ஜியின் சொத்துக்களை பிறருக்கு அளித்தல், புத்தகங்களை வேண்டியவர்க்கு கொடுத்தல் போன்ற அரும்பணிகளை செய்தார். அவர் அஸ்தியை நூறு ஆண்டுகளுக்கு பாதுகாப்பதற்குரிய தொகையும் உரியவர்களிடம் செலுத்தி வைத்திருந்தனர். திரு மோடி அவர்கள் குஜராத்தின் முதலமைச்சராக இருந்த 2003ல் சுவிட்ஜர்லாந்திலிருந்து ஷியாம்ஜி அவர்களின் அஸ்தியை இந்தியாவிற்கு கொணர்ந்தது குறித்து பெருமிதமாக பேசினார். அதை வைத்து மாவட்டங்கள் தோறும் ஊர்வலம் நடத்தினார்.

இந்தியாவில் தண்டி யாத்திரை, பகத்சிங் செய்திகள் பெரிதாக வந்துகொண்டிருந்த நேரத்தால் கிருஷ்ணாவின் மரணம் பெரிதாக பேசப்படவில்லை.

வ வே சு அவர்கள் கூட இந்தியன் இல்லத்தில் தங்கியிருந்தவர்தான். காந்தி அங்கு சென்று உரையாடியிருக்கிறார். ஷியாம்ஜியின் ஜப மந்திரமாக Resistance to aggression is not only justifiable but also imperative ஆக இருந்தது. அதை அவர் ஹெர்பர்ட் ஸ்பென்சரிடமிருந்து எடுத்துக்கொண்டார். மாக்சிம் கார்க்கி ஷியாம்ஜியை இந்தியாவின் மாஜினி எனப் புகழ்ந்தார். இந்திய அரசாங்கம் 1989ல் ஷியாம்ஜி வர்மாவிற்கு அஞ்சல்தலை வெளியிட்டு தன் நன்றியை வெளிப்படுத்திக்கொண்டது.

ஷியாம்ஜியை தீவிர இந்து அடையாளமிட்டு மோடி அவர்கள் திசை திருப்புவதை சுரேந்திர டோலாக்கியா போன்ற வர்மா சமூக மய்யம் சார்ந்தவர்கள் விமர்சித்தனர். காம்ரேட் ஷியாம்ஜி என சொல்லத்தகுந்தவர் வர்மா என்றார் டோலக்கியா.

The India House was a hostel for patriotic Indian students in London that was run by Krishnavarma between 1905 and 1910 and allegedly served as a headquarter and operational base for the radical wing of Indian nationalism that came to labelled revoultionary terrorists by the British என்கிற பொது மதிப்பீடு இருந்தது.

ஏறத்தாழ 10 ஆண்டுகள் 1908-1918 சர்வதேச பயங்கரவாத வலைப்பின்னலின் தலைமையாகவே ஷியாம்ஜி கருதப்பட்டார். பிரிட்டிஷ் 'terrorists' எனப் பார்த்தவர்களை இந்திய விடுதலை வரலாறு புரட்சிகரவாதிகளாகவும் தேசபக்தர்களாகவுமே பதிவு செய்துகொண்டது. Interpreter and populariser of Victorian liberalism particularly the spencerian variety என அவரை ஹரல்ட் மதிப்பிடுகிறார். Krishna varma's life story is closely related to his exchanges with western radicals and freethinkers and his efforts in transnational alliance building. Shyamji's position as a recipient, mediator and producer of Knowledge, both sacred and secular, south asian and western எனவும் ஹரால்ட் தன் பார்வையை முன் வைக்கிறார். புனித, மதசார்பற்ற, தெற்காசியாவின் மற்றும் மேற்குலகின் ஞானத்தையும் அவர் பெற்றவராகவும் பகிர்ந்தளித்தவராகவும் செயல்பட்டார்.

அக்டோபர் 1906ல் காந்தி 'இந்தியா இல்லம்' வந்தார். சாவர்க்கரை சந்தித்து உரையாடினார். சாவர்க்கர் இறால் உணவை சமைத்துக்கொண்டிருந்தார். சாவர்க்கர் காந்தியிடம் வேகவைக்கப்பட்ட மீன்தான் என்றார் " If you cannot eat with us how on earth are you going to work with us? என்கிற பதிவை வீக் தந்துள்ளது.

ராஜ்மோகன் காந்தி தனது 'MohanDas A True Story of a Man his people and an Empire' என்கிற பெரும் ஆக்கத்தில் கீழ்கண்ட பதிவை செய்துள்ளார்.

" while in London Gandhi met British suffragettes for women's rights and also Shyamiji Krishna varma (1857-1930), a Gujaratti barrister and linguist who had studied in Oxford. Condoning violent means for Indian Independence, Krishnavarma had in 1905 set up India House in Highgate for putting up and training young Indians, and also started a monthly, the Indian Sociologist, which attacked Gandhi's stand during the Zulu rebellion.

Spending two nights in India House- an indication of his concern about its thinking- Gandhi proposed peaceful disobedience as an alternative to violence. Present at these discussions were

young admirers of Krishnavarma, including a recent arrival from India, twenty three year old Vinayak Damodar Savarkar, a future ideologue of Hindu militancy”

திங்கரா செய்த 'பிரிட்டிஷ் அதிகாரி வைலி கொலை' நடந்த 8 நாட்களில் 1909ல் காந்தி லண்டன் வந்தார். இது குறித்து ராஜ்மோகன் காந்தி செய்துள்ள பதிவு

“Many Indians studying in England seemed to support Dhingara’s deed. After writing in the Indian Sociologist that patriotic homicide was not murder, Krishnavarma, the editor, had slipped away to France. However a cook in India House and other eyewitnesses gave evidence, and Dhingara was hanged on 17th August. Shocked by the killing and by its defence, Gandhi commented in the 14th Aug issue of Indian Opinion

As Gandhi saw it, those who incited him were guiltierthan Dhingara, who may have been courageous in inviting death, but the courage was the result of intoxication.

1909ல் சாவர்க்கர் திங்கரா வழக்கில் தனது பங்கை மறைத்துக்கொண்டாலும், அவர்தான் திங்கராவை encourage செய்தார் என்றும் defence தயாரித்தவர் என்றும் தெரிய வந்ததாக ராஜ்மோகன் புத்தகம் சொல்கிறது.

அவ்வாண்டு அக்டோபர் 24ல் போர்க்குணமிக்க மாணவர்கள் மத்தியில் விருந்து ஒன்றில் காந்தி, ஹபீப், சாவர்க்கர் உரையாற்றினர். வ வே சு அய்யர், ஆசப் அலி, டி எஸ் எஸ் ராஜன் போன்றவர் பங்கேற்று இருந்தனர். சமையலுக்குக் கூட முன்னமே வந்திருந்து தன்னை அடையாளப்படுத்திக் கொள்ளாமல் காந்தி அமைதியாக உதவினார் என்பது பரவலாக அறியப்பட்ட செய்தி.

இந்த சூழலின் அனுபவங்களுக்கு பின்னர்தான் தான் கப்பலில் kildonan castle தென்னாப்பிரிக்கா திரும்பியபோதுதான் நவம்பர் 13-22 1909ல் காந்தி 'ஹிந்த் ஸ்வராஜ்' என்கிற அவரது உயர்ந்த ஆக்கத்தை எழுதுகிறார்.

நேதாஜி அவர்களின் சகோதரர் சரத் சந்திர போஸ் தனது புகழஞ்சலியை ஷியாமா குறித்து தெரிவித்தார்.

I feel proud to call to mind the glorious traditions that Shyamiji Krishna varma and his comrades established in their fight for India's freedom...May the example of Shyamiji Krishna varma and his comrades continue to inspire the people of India "

அக்டோபர் 20, 1912ல் மாக்சிம் கார்க்கி ஷியாம்ஜிக்கு கடிதம் எழுதியிருந்தார். இந்தியன் சோசையலாஜி கிடைப்பதற்கு நன்றி தெரிவித்து இருந்தார். இந்தியர்கள் இயக்கம் குறித்து ருஷ்ய ஜனநாயகவாதிகள்

அறியத்தக்கவகையில் 80000 லெட்டர்களுக்குள் கட்டுரை தரமுடியுமா எனக் கேட்டிருந்தார். You, Krishna varma, the Mazzini of India, you know the desires of your great people and you will certainly understand what the Russian people must know about the life of contemporary India. I expect your letter and I wish you much health and luck என அக்கடிதத்தை கார்க்கி முடித்திருந்தார். இந்து லால் யக்னிக் பதிவில் பகத்சிங் தனது புகழஞ்சலியை ஷியாம்ஜி மறைவு அறிந்து தெரிவித்ததாக சொல்லப்பட்டுள்ளது.

ஷியாம்ஜி இங்கிலாந்தின் கொடுமைக்கு எதிரான அணிசேர்க்கை என்பதற்கு கீழ்கண்ட முன்மொழிவை தந்தார்.

If the India Home Rule society, the swadeshi organisations in India, the young Egypt movement, the discontented in South Africa, and the powerful Organisation of the Sinn Fein Party of Ireland join hands, much effective work can be done against England by their mvements being united and acting in accord, exchanging ideas and suggestions, all makinga forward move along the same lines at the same psychological moment" அவர் ஒருவகையிலான காஸ்மோபாலிட்டன் காலனிய எதிர்ப்புக் கொள்கையை முன்நிறுத்தினார்.

ஹைண்ட்மேன் சோசலிச தலைவருடனும் அனார்க்கிசம் சார்ந்த ஸ்டிக்லாண்ட், அல்ட்ரெட் உடனும் அவர் தோழமையுடன் இருந்தார். "while sharing in the extremists' political aims and methods, Krishnavarma's nationalism drew on Spencerian Philosophy and social science, rather than on neo- vedantic spiritualism, generating an anti colonialism that took aim at the sociological foundations of empire" மேற்கூறிய பதிவுகளை நாம் இந்தர் மன்வா ஆய்வுகட்டுரையில் பார்க்கமுடிகிறது (Resistence Spencer Krishnavarma)

கதர் கம்யூனிஸ்ட் பார்ட்டி "Among the Indian political activists abroad, including those exiled by the British, there were several who admired and even met with Lenin. These included, among others, V.D. Savarkar, Bhikaji Cama and Virendra Nath Chattopadhyaya." என்கிற பதிவைத் தருகிறது. (CGPI.org/node/5897)

ஆசப் அலி ஷியாம்ஜிக்கு செப்டம்பர் 1909ல் கடிதம் ஒன்ற எழுதியதான பதிவை தனஞ்செய் கீர் தனது சாவர்க்கர் புத்தகத்தில் தருகிறார். அக்கடித வாசகமாக கீழ்கண்டவை இடம் பெற்றுள்ளது. " I am staying with some Muslim friends who do not like me to associate with nationalists; and, to save many unpleasant consequences, I do not want to irritate them unnecessarily"

ஆசப் அலி அவரது Memoirs புத்தகத்தில் 'இந்தியன் ஹவுஸ்' குறித்த தனது நினைவைப் பகிர்ந்துகொண்டுள்ளார். ஞாயிறு வாரக்கூட்டங்களில் 20 முதல்

30 பேர் பங்கேற்பர். எங்களில் ஒருவர் தலைவராக இருந்து கூட்டத்தை நடத்துவார். ஒருவர் தனது ஆய்வு குறித்த சொற்பொழிவை நல்குவார். ஷியாம்ஜி பாரிசுக்கு சென்ற பின்னர் சாவர்க்கர் பொறுப்பில் அவ்வில்லம் செயல்பட்டது. சாவர்க்கர் அனுபவம் கூடியவராகவும் பேசினால் அனைவரையும் வசப்படுத்துபவராகவும் இருந்தார். அவர் சரியாக ஆங்கிலம் பேசுவது குறித்து கவலைப்பட்டதில்லை. பிபின் சந்திரபால் வருவார். அவரது மகன் நானு என்கிற நிரஞ்சன் பால் சாவர்க்கரின் நண்பராக அடிக்கடி வருவார். டாக்டர் கே பி ஜெய்ஸ்வால் வரவும் இருந்தது.

சாவர்க்கரின் 1857 எழுச்சியை மொழிபெயர்க்க உதவிக்கொண்டிருந்த W V Phadke அங்கு இருந்தார். சிக்கந்தர் ஹயத், சக்லத்வாலா போன்றவர்களும் வரக்கூடியவர்கள். விரேந்திரநாத் சட்டோபாத்யாய் அங்கு வந்து எங்களுடன் நண்பரானார். ஆகஸ்ட் 1909ல் தசரா விருந்து ஒன்று Bayswater Nizamuddin Restaurant ல் ஏற்பாடு செய்யப்பட்டு அதற்குத்தான் காந்தி அழைக்கப்பட்டிருந்தார். ஆனால் காந்தி அன்று 12 வாக்கியங்கள் கூட பேசியிருக்கமாட்டார். சாவர்க்கருக்கு வழிவிட்டு முடிக்கிறேன் என்று அவர் சுருக்கமாக பேசினார்.

சாவர்க்கர் ராமன் ராவணன் போராட்டம் தர்மம்- அதர்மம் போராட்டம் குறித்து dazzingly brilliant speech தந்தார். என்னால் அங்கு 15 நாட்களுக்கு மேல் இருக்க முடியவில்லை. உணவு, பழக்கம் எல்லாம் பார்த்துவிட்டு எனது தனி உலகிற்கு போக முடிவெடுத்தேன் வாரக்கூட்டங்களுக்கு மட்டும் போய்வந்தேன்.

திங்கரா அதிகம் பேசமாட்டார். நிரஞ்சனுடன் பேசி மகிழ்வார். அவரின் வங்க மொழி இசையை கேட்பார். என்னைப்பார்த்து உருது பாடல் பாடச்சொல்வார். சிலநாட்கள் இடைவெளியில் திடிரென ஒருநாள் பேப்பர் பையன் கொலை எனக்கூவி பேப்பர் விற்றதை பார்த்தோம். பக்கத்தில் இருந்த டச்சுக்காரார்தான் உங்கள் நாட்டுக்காரர்தான் கொலை செய்துள்ளார் என சொன்னபிறகுதான் அதில் திங்கரா தொடர்பு குறித்தே அறிய முடிந்தது. நானும் வைலியை திங்கரா சுட்ட அக்கூட்டத்திற்கு போய் இருக்கவேண்டியவன். ஆனால் சரியான உடை தயாராக இல்லாததால் போகவில்லை. திங்கராவின் அறிக்கை ஒன்றை சாவர்க்கர் ஆகஸ்ட்16, 1909ல் டெய்லி நியூஸ்க்கு தந்தார். " I believe that a nation held in bondage ..with the help of foreign bayonets is in a perpetual state of war. since open battle is rendered impossible to a disarmed race, I attacked by surprise" என அவ்வறிக்கையில் வாசகங்கள் காணப்பட்டது. மேற்கூறிய பதிவை ஆசப் அலி அவரது Memoirs புத்தகத்தில் தருகிறார்.

கொடுங்கோலன் கீழ் கட்டுண்டு கிடந்தால் ஒருவர் தத்துவவாதியாக, சீர்திருத்தவாதியாக, சமய உபதேசியாக இருந்தாலும் அப்படிப்பட்ட வாழ்க்கையில் என்ன பெருமிதம் இருக்க முடியும் என ஷியாம்ஜியிடம் கேள்வி இருந்தது. விடுதலை என்ற ஒன்றே குறிக்கோளாகட்டும் என்றார். “life was not worth living … a man might be a great philosopher, an ardent social reformer or a fervid religious preacher, but all his philosophy, his zeal for social reform,or his religious fervour would not avail an iota, if he were tied down and chained to a post by a despot. Every effort ought, therefore, to be primarily directed towards the all-important goal of political freedom என்று கிருஷ்ண வர்மா எழுதினார். விடுதலை தாகத்துடன் வாழ்ந்த அவர் போதுமான அளவு மக்கள் மத்தியில் கொண்டு செல்லப்படாதவராகவே இருக்கிறார். அவரின் ஆர்வலர்கள் Unknown Patriot என்கிற ஆதங்கத்துடனேயே அவரைப்பற்றி விவாதித்து வருகின்றனர்.

இந்தியாவிற்கு வெளியே இருந்துகொண்டு பிரிட்டிஷ் எதிர்ப்பு இயக்கங்களில் பங்கேற்ற நாட்டுப்பற்றாளர்கள் பலர் இருந்துள்ளனர். அவர்களில் ஷியாம்ஜி முன்னோடியாக இருந்திருக்கிறார்.

துணைநின்றவை:


1. Shyamaji Krishna Varma The Unkonwn Patriot by Dr Ganesh Lal Varma
2. The wire Sidharth Deb article
3. Gandhi, Savarkar two irreconcilable poles in Indian history The week june 22, 2019
4. Shyamji Krishna Verma and India House- Prof satyavrata
5. Shyamji Krishan varma: sanskrit, sociology and Anti imperilalism by Harald Fischer Tine (Introduction Chapter google ebook)
6. RajMohan Gandhi : Mohandas The Man..
7. Asaf Ali Memoirs



ஆசிரியரின் பிற நூல்கள்

1. மார்க்சியத் தடங்கள்
2. ரோசாலக்ஸம்பர்க்
3. போராளிகளின் குரல்
4. பகவத்கீதை பன்முகக் குரல்கள்
5. Trade Justice in Telecom
6. Selected Ides of O.P Gupta
7. ஹெகல் துவங்கி..
8. கார்க்கியின் அரசியல்வெளி
9. நவீன சிந்தனையின் இந்தியப் பன்முகங்கள்
10. காந்தியைக் கண்டுணர்தல்

www.pattabiwrites.in

Ph : 9443865366